சொல்லிய பதிலிலிருந்து தெரியவருகிறது. இதற்குக் காரணம் என்ன என்று சொல்வார்களா ?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** 1960-ல் அந்தத் தொகை சாங்ஷன் செய்யப்பட்டிருந்தாலும் 1962-ம் வருஷக் கடைசி வரையில் சொசைடி அதைப் பயன்படுத்தவில்லை. அதற்குப் பிறகுதான் சப்சிடி பிரச்னை வந்தது. Accountant-General க்கு refer செய்த பிறகுதான் கவர்ன்மெண்ட் உத்தரவிட்டு பணத்தை வழங்க நடவடிக்கை எடுக்கப்பட்டது.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** சாதாரணமாக இதுபோன்ற கூட்டுறவு சங்கங்களுக்கு கடன் உதவுவதற்கு அரசாங்கம் அனுமதி கொடுக்கிறதே தவிர, அரசாங்கத்தில் உள்ள அலுவலர்கள் கொடுக்கும் சிரமங்களும் தொந்திரவுகளும் அதிகமாக இருக்கின்றன. அதனுல்தான் இந்தக் காலதாமதம் ஆனது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அதற்குப் பரிகாரம் செய்யப்படுமா ?

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** Irrigation சம்பந்தப்பட்ட கிணறுகள், பம்ப் செட்டு இவையெல்லாம் Technical people சொல்லவேண்டியது. சம்பந்தப்பட்ட கூட்டுறவு டிபார்ட்மெண்டுதான் சாங்ஷன் செய்யவேண்டியது. இதில் கால தாமதம் ஏற்பட்டிருக்கிறது. இரண்டு வருஷ காலத்திற்குள் கடன் தொகையை சொசைடியார் பெற்றிருந்தால் இவ்வளவு கால தாமதத்திற்கு இடம் இருந்திருக்காது, என்று சர்க்கார் கருதுகிறது.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** இந்தக் தொகை கூட சட்டமன்றத்தில் 19-12-1964-ல் கேள்வி கேட்கப்பட்டதற்குப் பிறகு அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கேள்வி கேட்டதால்தான் அது கொடுக்கப்பட்டதே தவிர இல்லாவிட்டால் அந்த இலாகா கொஞ்சம் கூட இதில் சிரத்தை எடுத்து இருக்காது என்பதை அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்வதோடு, 12-12-1964-ல் கேட்ட கேள்விக்கு இப்போதுதான் அமைச்சர் அவர்கள் பதில் சொல்கிருர்கள் என்பதை தலைவர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். எதிர்காலத்திலாவது இதற்குப் பரிகாரம் தேட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**கனம் திரு. எஸ். எம். ஏ. மஜீத் :** அபிப்பிராயத்திற்கு நன்றி.

## *Pablo Boats*

* 30 *Q.*—SRI M. ETHIRAJULU : Will the Hon. the Minister for Information and Publicity be pleased to state—

(*a*) the number of Pablo Boats manufactured in the State during 1962–63 and 1963–64 ;

3-20 p.m. (*b*) the number of Pablo Boats supplied to the fishermen in the districts of South Arcot, Ramanathapuram and Kanyakumari during the above period ; and

(*c*) the basis on which the Pablo Boats are given to fishermen?

2nd August 1965]

**கனம் திரு. ஜி. பூவராகன் :**

(அ).—

| | 25 அடிப் படகு. | 30 அடிப் படகு. | மொத்தப் படகுகள். |
|---|---|---|---|
| 1962-63 .. .. | 14 | 36 | 50 |
| 1963-64 .. .. | 15 | 55 | 70 |

(இ).—

| | 1962-63 | 1963-64 |
|---|---|---|
| தென் ஆர்க்காடு .. .. .. | 3 | 11 |
| இராமநாதபுரம் .. .. .. | 4 | 6 |
| கன்னியாகுமரி .. .. .. | 13 | 18 |

(உ) (i) பயிற்சி பெற்றவர்களையே கொண்ட எல்லாத் தொகுதியினர்க்கும் இப் படகுகள் முற்றிலும் வழங்கப்படுகின்றன.

(ii) மீதமுள்ள படகுகளில் 50 சதவிகிதத்தைப் பயிற்சி பெற்ற இரண்டொருவர்களைக்கொண்ட தொகுதியினர்க்கு வழங்குகிறார்கள்.

(iii) இன்னொரு பகுதியை, மீனவர்த் தொகுதியினர் பதிவு செய்துகொண்டுள்ள வரிசைக் கிரமப்படி, அத் தொகுதியினரின் பயிற்சி பெற்றவர்கள் இருக்கிறார்களா என்று கவனிக்காமலேயே வழங்குகிறார்கள்.

**திரு. எம். எத்திராஜுலு :** மீன் பிடி தொழிலை ஏற்று நடத்தும் மீனவர்களுக்கு மட்டும் இந்தப் படகுகள் கொடுக்கப்படுகின்றனவா ? இதே தொழிலை ஏற்று நடத்தும் பிற சமூகத்தவர்களுக்கும் கொடுக்கப்படுகிறதா ?

**கனம் திரு. ஜி. பூவராகன் :** மீன்பிடி தொழிலில் ஈடுபட்டிருக்கும் சமூகத்தவர்களுக்கு தான் இது கொடுக்கப்படுகிறது.

**திரு. எம். எத்திராஜுலு :** இதர சமூகத்தார் இந்தப் படகை வைத்து மீன்பிடி தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் கொடுக்கப்படுமா ?

**கனம் திரு. ஜி. பூவராகன் :** யார் யார் மீன்பிடி தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்களோ அவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது.

MR. CHAIRMAN : Questions are over.

**[*Note.*— An asterist (*)At the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—PRESENTAION OF THE REPORT OF THE COMMITTEE OF PRIVILEGES ON "OBSTRUCTION CASE"

DR. A. LAKSHMANASWAMI MUDALIAR : Mr. Chairman, Sir, I beg to submit to the House the Report of the Committee of Privileges on the "Obstruction Case" that was referred to it. Ordinarily, Sir, it may not be necessary to say anything because the report has been in the hands of the hon. Members for some time. But this is the very first opportunity when such a case was